௩. சஞ்சலமேதுனக்கடைகு குருசாதுபதம் பணியத்துடங்கு வ
ஞ்சாகமேவேண்டாம் மன்னன் பொன்னமபலவரதா வரதா
வென்றுறையாமல் கெட்டுப் ஞ்க

---

கீர்த்தனம்-இ-ம்-காம்போதி-ஜம்பைதாளம்

பல்லவி.

இனிசுமக்க முடியாதுதேகம் இல்லை

அநுபல்லவி.

புறஞ்சிவகாமவல்லி யுமைபாகா

சரணங்கள்.

௧. மலத்தினால்விளைந்தபுழுக்கூடு துன்ப - வாரியைம்புலவேடர்
வாழுமபெருங்காடு சலசதுளியாமெலிந்தவீடு இம்மைதழை
த்தலெனுஞ் சநாந்தனையெடுத்துப்போடு இனிச்

௨. ஒருநாலுபேர்சுமக்கு மூட்டை-நானொருவனே சுமப்பனிந்தவு
டன்மாயக்கூட்டை-மருவிலாப் பழமகாயக்கோட்டை கன்ன
வாசலொன்பதாகியே வரும்பழையவீட்டை இனிச்

௩. வருவாதவூரனையுங்காத்தீர் இரண்யவன்மனுக்குத் தனகாகம்
வரவேவீர்பார்த்தீர் திருநாளைப்போவானையுஞ் சேர்த்தீர்நானு
ஞ் சிற்சபையிலானந்தத் தெரிசனந்தந்தேற்றிற் இனிச்

௪. வருவதென்றுமலர்க்கொன்றைதாரும் வந்து-வாழாது வாழு
மிந்த மலமயக்கந்தரும் திருவருளானேக்கி யென்னைப்பாறும்
பார்த்துச்சித்தமகிழ்ந்தாநந்தம் தென்மதுரைசேரும் ஞ்ள

---

கீர்த்தனம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

இன்னம்பிறவாமலேயாளாய்கேளாய்

அநுபல்லவி.

பொன்னம்பலவாணுக பூமதனைவென்ற யோகாம்பரந்தரமும் ஏமச
பையிலவைபோகாபுலி யூர்ச்சிவகாம வல்லியுமைபாகா இன்னம்

சரணங்கள்.

௧. காயமேநிலையென்றெண்ணி தீயபாவமேபண்ணிமாயநாகைக
ண்ணிவருந்தவே முடியாது பாவஞ்செய்யாமலிருந்த தலமு
மொன்றுதவஞ்செய்தாலு மிருந்தஜனனமும்போதும்

௨. தொலையாச்சனனத்தாலே அலைவாய்த்துரும்புபோலே நிலையா
ச்சுழலின்மேலே நின்னைமதருளைநாட்டியகலாக் கன்மவினைக
ளை விட்டோட்டி யழிவிலாதசின்மயவிழிகாட்டி இன்னம்

௩. நின்னருளினாலேவந்தேன் சந்நிதியினை யடைந்தேன்-முன்னம்
வினையைத்துறந்தேன் முண்டகடவுண்ட தாபாவணங்கினரை
யாணருறும வெகுநேயாகனகச்சபைதாண்டவநடராயா

கீர்த்தனம்-இ-ம்-ஆகிரி-ஆதிதாளம்.

பல்லவி.

கலந்துக்கொள்வேனே-இனிநான்-கலந்துகொள்வேனே

அநுபல்லவி.

கலந்துகொள்வேன் தில்லை யம்பலந்தன்னிபுல
காரணங்கடந்த பூரணத்துடனே கலந்

சரணங்கள்.

௧. கூற்றுவனுகத்தொடருமிருமைக்கொடிய வினைகளடியோடக
ன்றதுசாற்றும் பெரியபுவனமெல்லாங் கொண்டுதானது வா
னதுநானதுவாகக் கலந்துகொள்வேனே

௨. கட்டுரைகேளாத வன்மனமியான் வைத்தகாவலிறங்கி யென்
ன வலாளாய்து தொட்டுமறித்திங்கெனைத் தடுப்பாரெவர்
சொல்லற்கரியதோர் நல்லவுறவினிற் கலந்துகொள்வேனே

௩. செங்கோட்கடவுட் பதமும்பானுமுந் செய்பகமலத்தோள்
ளையுஞ்சலித்தது நங்குருநாதன்குறியும் நிலைத்தது-நம்பலமா
னபேரம்பலச்சோதியிற் கலந்துகொள்வேனே

---

கீர்த்தனம்-ஹு-ம் ஆரபி-ஏகதாளம்.

பல்லவி.

மாணிக்கவாசகர்பேரெனக்குத்தரவல்லாயோவறியேன்

அநுபல்லவி.

காணிக்கையாகக் கொடுத்தேனுனக்கென்னை
ஆணிப்பொன்தில்லை யம்பலவாணா மாணிக்க

சரணங்கள்.

௧. நோயும்வறுமையுஞ்சண்டையிடாதே-நோக்கமரநோக்கநோ
க்கவிடாதேதாயுந்தருமஞ்சலித்துவிடாதேசந்நிதியில்லையாதே
ஆபுமினப்பறைகூடியமூர்த்தியத்துவிதமுத்தியுத்தியளித்துத்தி
யமறுமையெதிர்நின்றதன்னுஞ்சிற்சபைமந்திரசிதம்பரதேவாபா

௨. கட்டிலைவிட்டுக்கிடத்துமென்னாதே காலைக்கரங்களைக்கட்டுமென்னாதே-கொட்டிமுழக்கிட்டுக்கூகூவென்னாதே கோரணிகொள்ளாதேயெட்டியுருவாபுலம்பிவாராதே யேழப்பிணத்தை யெடுமென்றிடாதேசிட்டர்தொழுந்திருகட்டளைமேவுஞ்சிதம்பரதேவா திருநடராயா மாணிக்

௩. கட்டையின்மேல்வைத்துச்சுட்டுவிடாதேகள்ளக்குழியிற்புதைத்துவிடாதே பட்டும்பணியுந்தரித்தயலோர்வந்துபாலளிக்குத்தேகிட்டியொருவர்சடங்குசெய்யாதே கேட்டவரெல்லாங்கிடைக்கத்தருமெனச்சிட்டிப்பவன்பணி சிறசபைமேவுஞ்சின்மயாரூபாசிதம்பரநாதா மாணி

௪. அம்பரும்லிங்கத் தடைத்தனரென்று மாரூர்வெண்கிரியேறினரென்றுஞ்செப்பரியதிருஞானசம்பந்தர் தேகூடன்சென்றாரென்றும் இப்படியென்னை யலைத்துவிடாதே எம்மானிருந்தபடியே விருந்திடச் செப்பருவீரட்டணம்புரிமேவுஞ்சிதம்பரதேவா சிவகாமிநேயா

௫. சிற்பரதற்பரமெய்ப்பொருளுங்கண்டுசித்தரெல்லாம்நிறைந்துதெரிசிக்கத் தற்பதமாம்நாலாஞ் சத்தினிபாதமுஞ்சாயுச்சியமும்பெறவேபொற்பூமாரியிமையோர் சொரிந்திடப் பொன்னூசலாடுந்திருவாதிரைநாளிற் கற்பூரதீபம்போலென்றனுடலைக்கனகசபையிற்கலந்துக்கொள்வாயே. மாணிக்

முத்துத்தாண்டவர்சபாநாதர்பேரில்பாடியகீர்த்தனம்
முற்றிற்று.



உ
திருச்சிற்றம்பலம்.
சபாநாதர் துணை.

## முத்துத்தாண்டவர்பதம்.

பதம்-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்
பல்லவி.

வருவார்வருவாரென்றென் மனதைத்தேற்றுவாரல்லால்
வந்தாரென்பாரைக் காண்கிலேன

அநுபல்லவி.

தெருவிற்கும்வாசற்கும் திரிவார்சகிமாரெல்லாந்
தில்லைபுரீசர்முன்போய் நில்லாரென்காதல்சொல்லார்-வரு

சரணங்கள்.

௧. நிலாவிலுலாவச்சொல்வார் சலவைப்பன்னீரிறைப்பார் கலவிக்குநினைப்பார்மருந்தைத்தைமிதுவென்பார் காலமோவிதுதேசிகப்பலமோனோதுசெய்ய உலகாளுந்தில்லைசகூறவியென்னையனைய-வ

௩.காமதிபோமோசாமி தாமதஞ்செய்வாரோ நீ மயக்கச்சேதமென்று பூமலரேற்றவருவார் காமனல்வந்தாலென்ன சோமனல்வந்தாலென்ன பூமலர்வாடுமுன்னே யேமசபேசரென்றான். வரு

௪.கங்கைசடையிலாடச் செங்கையிற்றுடியாடப் பங்கயமெனும் கைகொண்டுமங்கையர்கள்கொண்டாடநங்கைசிவகாமிகொங்கைசேர் புயமாட செங்கைவீசியாடச் சதங்கைபாதத்திலாட வரு

பதம்-இ-ம்-நாதநாமக்கிரியை ஏகதாளம்

பல்லவி.

தேனார்மொழிமானாள் தன்னைச்சேரீர்மையல்தீரீர்

அநுபல்லவி.

மானுடரனே யம்பலவாணா பணிபூணா தே

சரணங்கள்.

௧. அளகமதுசரியுமுகமலரவனிநெரியக் களபமுலைபுளகமெழக் கலவிசெய்யத்தருணம் வளமைபெருடக்குமாதுகைமார்பாவதிருபர்கள்மார்விடவூணாதில்லைக்கனகசபைவாணா தே

௨. அன்னைதான்வசைபேசவேதுணையானமாதருமேசவேகன்னன்மாமதனெய்யவேமலர்க்கையிற்கங்கணந்தொய்யவே என்னதான்சொல்வாள்சொல்வீர்மயமெளிதல்லவே கில்லீர் மன்னிசுந்தரர்தாதில்லைமன்றுளாடியபாதா தே

௩.சந்தனம்சுடுமெதன்பள்மனந்தகைந்தாற்பகையென்பள் அந்தியுந்தாணலென்பலொருவல்லுருகமென்பள்கொன்றார்கொன்றைந்தமாநறுங்கோதையம்பிகைவாமா இந்திரன்திருமாலயன்றொழுமீசர்நடராசர் தே

பதம்-இ-ம்-ஆஷாடகன்னடம்-ஏகதாளம்.

பல்லவி.

பேசவுமொண்ணாதோ கோபமேதோ தென்புலியூர்

அநுபல்லவி.

ஈசரேயுமக்குநானாகாதோ பேச

சரணங்கள்.

௧. வருந்தினாலமைக்கவுமாச்சோ உம்முடன்பொருந்தாதமென்னைச் சேர்ந்தாலேச்சோ இருந்தவிடமெல்லாமவன்பேச்சோ அவன்னுடையின்மருந்துதான்றலைக்கேறிப்போச்சோ பேச

௨. மாதர்வசையாலேமனம்போமோ வென்னைத்தள்ளநீதமோ பூவினைபோமோகத்தாலாசியதவர்நீர்தாமோ சுந்தரனு யிப்படிசெய்யலாமோ

௩. கொந்தலரமளியிற்சேர்ந்தீரே சேர்ந்தணைந்துசந்ததம்நீங்க மையல்தந்தீரே அந்தமின்னூர்தம்மைநினைந்தீரே சிவகாமசுந்தரிபாகரே மறந்தீரோ பேச

பதம்-இ-ம்-கலியாணி-அடதாளம்

பல்லவி.

அப்படியிப்படிசெய்தாற்கொப்பினேன்
தப்பிதமோதில்லைத்தாண்டவராயா

அநுபல்லவி.

பொற்படியேகொடுத் தெப்படியாகிலும்
மெப்புடன்வந்தென்னை பொப்புடன்கூடநீ அப்

சரணங்கள்.

௧. வாலையிலேதந்தச் சேலையிலேமுத்துமாலையிலே பொன்னோலையிலேசெய்தவேலையிலேனந்திமாலையிலே தென்னஞ்சோலையிலேகமலீலையேநீர் அப்

௨. மேடையிலேமலர் சூடையிலேவிளையாடையிலே பாவாடையிலேநீராடையிலே யென்னைக்கூடையிலே முத்தாடையிலேகைபோடையிலேநீர் அப்

௩. நாளையிலேயென்னையாளையிலேசொந்தக் காளையிலேறியே வாளையிலேயிந்தவேளையிலேநல்லநாளையிலேகர்ப்டக்கோளையிலே ராகைமீளையிலேநீர் அப்

பதம்-இ-ம்-கல்யாணி-ஏகதாளம்

பல்லவி.

சரசமிப்படிசெய்யலாமோ சாமிநீர் சரசமிப்படிசெய்யலாமோ

அநுபல்லவி.

வரிசைபெறும்விநோதரே வளர்சிதம்பரநாதரே சரச

சரணங்கள்.

௧. ஸ்தனத்திலேகையைப்போடுறீர் முகத்தைப்பார்த்தாகாடுறீர்
தலையிலேமலர்சூடுறீர் தழுவியேவிளையாடுறீர்-சரச

௨. மானமுறுமெங்கள்குலத்திலே மாதவாவருமின்பநலத்திலே
ஞானமுறுஞ்சிவஸ்தலத்திலே நாகரிகபொன்னம்பலத்திலே-சர

௩. வேதந்துதித்திடும்நீதரே மிகுத்திடும்பிரக்யாதரே
உயருந்தில்லைவாசரே யுயர்சிதம்பரநாதரே-சரச

பதம்-இ-ம்-சாவேரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

[illegible]

அநுபல்லவி.

வேண்டாமிதெல்லார்க்குங்காரியமல்ல தீண்டாதேநில்லும் தாய்தமர்கண் டால்,ஆண்டிவரென்றும்பயப்படார்தில்லைத்தாண்டவராயரே வே

சரணங்கள்.

ராவிலேவந்தென்னைமல்லிகைப் பூவினாலேயெறிந்துசருவித்
தாவிமடியைப்பிடித்துப்பண்ணாதே சரசமேபண்ணுறீர்
கோவிலில்லாதவூரோவையோ பாவியென்பட்சம்யார்சொல்வார்கள்
சேவிலேறும்நீதமே திருத்தில்லைநாதரே-வே

ஆருமில்லாவிடத்திற்பிடித்தாற் சேருவாளென்றுபார்க்கிறீர் அந்தத்
தாருகாவனத்துமாதர்போலல்ல சமர்த்தினானையா
ஊருமுலகறியச்சேலை தாருமிரவுபகலும்வீட்டில்
வாருங்கூடியணையலாஞ்செம்பொன் மன்றுளீசரே-வே

இன்னாரினியாரென்றெண்ணமல் முன்னாளுறவாயிருந்தவரைப்
போற்பின்னாலேவந்துதழுவினாற்கண்டபேரென்னசொல்வார்
சொன்னாலுஞ்சற்றுமறிகிறீரில்லை முன்னாளறிந்தவர்வருகிறார்பாரும்
பொன்னாடர்பணிகைலைவாசரே புலியூரீசரே-வே

பதம்-இ-ம்-நீலாம்புரி-ஆம்பைதாளம்

பல்லவி

அழைத்துவருவாபோடி அடிமானேயின்பந்

அநுபல்லவி.

தழைத்தபுலியூரிற்றாண்டவரைத்தாமே

சரணங்கள்.

க. அன்னநடைமின்னேயேனிவ்வன்மமென்னையன்னையென்றுன்பா ருன்றன்தன்மம்சொன்னேனொருவார்த்தைகன்மநாளுஞ்சுக முறவேமருவாதஜென்மமென்னஜென்மம் அழை

உ. செம்பொன்மலரின்பமுடன்சூடி யுயர்செய்பவளவாயிலிசைபா டிக்-கும்பமெனுமிருஸ்தனத்தைநாடி யென்னைக்கூடியவர்போன விடந்தேடியுறவாடி அழை

ஙு. தில்லைவனந்தனிலிருக்குமீசர் சிவகாமவல்லியுடன்பிரியாதநேசர் அல்லலறுந்தாண்டவப்பிரகாசர் இப்போது அன்னமேநீர்சொ ன்னால்வருவான்பிராணேசர் அழை

பதம்-இ-ம்-எதுகுலகாம்போதிஆதிதாளம்

பல்லவி.

ஆசைதீரவேயென்னை அணைந்தாலொண்ணாதோ

அநுபல்லவி.

பூசைபுரியுந்தில்லையீசா சபைநடேசா ஆசை

சரணங்கள்.

க. சந்திரனைக்கண்டுநீலமந்தரங்கமானதுபோலன்தன்மீதிற் பட்ச

வைத்துவந்தாலொண்ணுதோசந்தர்ப்பமாகபுஷ்பபாணமந்திரே
ரமேவருமேதந்திரமோசெய்வதெல்லாமந்திரசபைநடேசா (ஆ)

உ. தேடியவல்லவன்போடகூடி மருவாதிருந்தா னீடியயுலகிற் பே
டோடிநின்றுய்யுமோநாடியேவந்தவென்றுன்மோடிசெய்யலாகு
மோபாடியே கின்னரர்போற்றவாடியசபைநடேசா (ஆச)

ங. கருமேகங்கண்டு மயிலொருமைப்படுலீலைபோற் கரிசனமுடன்
சேர்தல்பெருமையதல்லவோ திருவுளமகிழ்ந்தென்னை மருவனை
மீதினிற்சுருதிபுகழுந்தில்லைக்கனகசபைநடேசா (ஆசை)

ஏசல்பதம்-இ-ம்-சௌராஷ்டிரம்-ஏகதாளம்.

பல்லவி.

திருமுத்துப்பந்தலின்கீழ் சுருதிப்பயன்முதலோர்
இருபக்கந்தொழவேவரும் இவராற்சொல்லனே
ஒருபத்தன்செயுந்தவத்தைக் கருதிகிருத்தங்காட்ட
வருகிறபேரம்பல வாணர்காண்மின்னே

வடகயிலைதனின்மூன்று சுடருமுதித்ததுபோல்
இடபமிசையேறிவரு மிவராற்சொல்லன்னே
கடல்கடையும்போதெழுந்த விடமமுதுசெயுநேசர்
நடநபராபரதில்லை நாயகர்காண்மின்னே

சுரரெனுமூவாயிரவர் திரளுமுனிவருஞ்சூழ
விரதமிசையேறிவரு மிவரார்சொல்லன்னே
சரமதராஜனுமூன்று புரமுமெரிபடமுனிந்த
பரமசிவகாமவல்லி பங்கர்காண்மின்னே

கந்தருவரிசைபாட தந்திரநான்மறைமுழங்க
இந்திரவிமானத்தில்வரு மிவரார்சொல்லன்னே
அந்திவடிவினர்தொண்டர் புந்தியில்வாழ்பவர்வால
சந்திரசேகராநந்தத் தாண்டவர்காண்மின்னே

பதம்-இ-ம்-சௌராஷ்டிரச்-அடதாளம்

பல்லவி.

நேசமேன்பூசலே ஞசையேன்பேசுரீர்
நேசமேன்பூசலே ஞசையேன்பூசுரீர்

அநுபல்லவி.

வாசன்சேர்தில்லைநட ராஜரேமுந்தவும்மை
மோசஞ்செய்தாளேயந்த ரோசமபோதாதோ (நேச)

சரணங்கள்.

வாடியென்றழைத்து வாடிமுகவிச்சைகள்
பாடியவன்மேற்சிந்து பாடிக்கொள்வீரல்லாற்
போடியென்கிறபேச்சைப் போடிமுன்னமும்போய்கூத்
தாடியென்பதுமெய்க்க வாடியபாதரே (நேச)

கொம்பனையாள்குடத்தில் கொம்பிரண்டானையொரு
கம்பஞ்சேர்த்தீர்சேர்த்தி கம்புலிகன்றிடக்கண்டீர்
அம்பலவாணரேயூ ரம்பலேலுமக்கிப்போ
தென்போலுமேயொருத்தி யின்பஞ்செய்வாளோ (நே)

பூண்டவாசையனேகம் பூண்டபோதேயெனக்கு
வேண்டாதவனைத்தீண்ட வேண்டாமென்றேனே
ஆண்டாரேநீரெனைப்பெண் டாண்டாற்றலைக்குமேலே
தாண்டமர்நீரே-தில்லைத் தாண்டவராயரே (நே)

பதம்-இ-ம்-நாதநாமக்கிரியை-ஏகதாளம்

பல்லவி.

நானேவலியவந்தேனோகோபம்

அநுபல்லவி.

ஏனோவம்பலத்துறைவானே தூயோனே

சரணங்கள்.

க. நினைத்துமனதின்வன்மங்கண்டு நெஞ்சிநினையாதெல்லாநினைந்து நின்றுதுவண்டுகனதனமெனுஸ்தனங்கண்டுநல்லகாணிக்கையெனவலங்காரமாகக்கொண்டு நானே

உ. தூதேதுமில்லையே யென்மீதுவீணே தூருசொல்லிப்பிரிந்துவந்ததேகூது வேறேயொருவரைத் தூதுபோக விடுத்தாற்றீராதென்றுவேண்டியிப்போது நானே

ங. தில்லையம்பலத்திலாடிநின்றசிவனேநீர்வாராததேசதியைநாடிமுல்லையமளிமேற்கூடிக்கொண்டமோகத்தையுன்னிமுயங்கவேதேடி

பதம்-இ-ம்-நீலாம்புரி-ஜம்பைதாளம்

பல்லவி.

கனவிலுமறப்பதில்லைமானே நாளுங்

அநுபல்லவி.

கனகசபையிலாடுங் கடவுள்பதந்தானே கனவிலு

சரணங்கள்.

க, ஒன்றாகநின்றசுதந்தரமும்மூவுலகுக்குயிருக்குயிராகியே யுணர்த்தும்விசித்திரமுங்குன்றாதருளளிக்குந்தீரமுமென்னைக்கூடிவினையாடியவுபாயதந்திரமுங் கனவிலு

உ, இன்பவெள்ளத்தழுந்துமிங்கிதமுங்கிருபையெங்கெங்குந்தானாயிருந்திலகுஞ்சதமும் அம்பரத்திலாடியபொற்பதமும் புஷ்பவனைமீதிலெனையணைந்தவனுபோகவிதமுங். கனவிலு

ங. பரமகல்யாணசர்வேசா யெங்கள்பார்வதியெனுஞ்சிவகாமிபிராணேசா கருணைசந்திரசேகரவிலாசம் நாளுங்கனகசபையிலனவந்தமும்நடேசன் கனவிலு

பதம்-இ-ம்-எ துகுலகாம்போதிஆதிதாளம்
பல்லவி.

தனித்திருக்கப்போகாதுமானே தில்லை

அநுபல்லவி.

வனத்துநடராஜர்தம்மைமருவாமனுனே தனித்

சரணங்கள்.

காமன்பெருங்கணைவளைத் தெய்யப்பூர்ண
கலைநிறைந்தமாமதியுந் தழலாகப்போய்ச்
சாமமெல்லாங்குயிற்கூவி வையவென்
றலையிலெழுத்தோவிதென் றெண்ணிமனம்நையத்(தனி)
இரவோர்யுகமாகுதெங்கே செல்வே-னினி
யெனவாரத்துப்பெண்கட்கிதை ஏதென்றுசொல்வேன்
காவிலெய்யுமதனை யென்றுசொல்வேன்-வீறு
காதல்வெள்ளந்தீர்ந்தென்று கலந்தணைந்துபுகழ்வேன்(தனி)
திங்கள்கங்கைபரவமணிலம் வேணி-புலியூர்
சிவகாமவல்லியிடப் பாகமாகரணி
செங்கமலப்பதத்தின் மனமூணிநறுந்
தேன்கமழும்பூங்கொன்றைத் தொடையதனைக்கேணீ(தனி)

பதம்-இ-ம்-கல்யாணி-அடதாளசாப்பு
பல்லவி.

சபையில்வந்ததிர்கில்லடி அவரைக்கிட்டித்
தழுவுவன்றராமல்லடி

அநுபல்லவி.

உபசரிப்பேன்சொல்ல அம்பலவாண ருளவறிந்தென்னைவெல்ல
சுபதினமென்றனக்குச் சொற்பனமாய்வந்ததிப்போ
அபிநயம்பிடித்தடிக்கடிகொண் டலைந்துநீதிரிகிறாய்-சபை

சரணங்கள்.

க. வழக்கமென்றறியாயோநாலுபேர்சொன்னவார்த்தையுங்குறியா
யோடி இழிக்குக்குத்தரியாயோதின வெடுத்தாவிடம்பார்த்துச்சி
சொரியாயோடி உழக்கிற்கிழக்குமேற்கென் றுண்டாக்குகிறாய்
த்தேடிமழைக்கொதுங்கிமனைக்குவழக்கிடுகிறாய்வாடி சபையி

உ. தெருவில்பெண்களைக்கூட்டுகிறாய்ஒளித்திருந்து திருடக்கன்ன
க்கோல்நீட்டுறாய்கருதித்திரகணமூட்டுறாய் விரித்துன்றுகடின்த்
தொண்டையைக்காட்டுகிறாய்பெருமைக்கொருசரிகைப்புடவை
யிரவில்வாங்கித்தரமறியாதுடுத்தித்தசுக்குகின்றசித்திராங்கி-ச

ங. இடக்குந்தொழின்மருக்குமோயுனக்குமினிமேற்குணம் பிறக்கு
மோஎடுத்தவடிசிறக்குமோ உன்னிடத்தினிலின்பநயம் பிறக்கு
மோ முடிக்காயம்பலத்தானை முயங்குவேனுனென்று இடுக்கிட்
டேவரும்விச்சத்தென்பாய்ச்சொல்கிறாயென்று சபை

பதம்-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

தெருவில்வாராளோ என்னைப்பண்-தெரிசனம்தாராளோ

அநுபல்லவி.

உருவிலியொடுதிரிபுரத்தையு முடனெரிசெய்நடராஜன் (தெரு)

சரணங்கள்.

க. வாசல்முன்னில்லாளோ எனக்கொரு வாசகஞ்சொல்லாளோ நே
சமாய்ப்புல்லேளோ கழலைத்தராஜனைவெல்லேளோ தேசிகனம்
பலவாணனடம்புரிதேவாதிதேவன்சிதம்பரநாதன் (தெருவி)

உ. போதுபோவதில்லையே யெனக்கொரு தூதுசொல்வாரில்லையே
ஈதரிந்தேதனில்லையேயென்மேற்குற்றமேதொன்றுமில்லையேவேத
னுமாலுமூவாயிரவருந்திரள்விண்ணவருந்தொழ வாடியபாதன்

ங. மெய்யென்றிருந்தேனேயவரிடசைகையறிந்தேனேமையல்தணி
ந்தேனே பசநதிடு மெய்யுங்குளிர்ந்தேனே வையகமுய்யபதஞ்
சலிபோற்றிட வாழுங்கனகசபைநடராஜன் (தெருவில்)

பதம்-இ-ம்-குறிஞ்சி-ஆதிதாளம்

பல்லவி.

கனவுகண்டெழுந்திருந்தேன்-மானே-தில்லை

அநுபல்லவி.

அனவரதநடராஜர்க் கன்புசெய்யநானே (கனவு)

சரணங்கள்.

க. தெருவிற்பவனிவந்திடவும்கண்டு தெரிசித்தளவிலென்றன்சீவன்
வாதைபடவும்ஒருகிளியைத் தூதுபோகவிடவும் மாசையுள்ளத்
திலடங்காமலோடிப்போய்த்தொடவும் (கனவுகண்)

உ. கண்டவுடனவர்மீதில்விழவும் வாசங்கமழ் கொன்றைமாலைதனி
ற்காதலுற்றுழவும் புண்டரீகபாதத்தைத்தொழவும்கொங்கைபூ
ரிக்கவுடைதாழப்புரத்தாரிகழவுங் (கனவுக)

ங. அங்கசன்சமர்செய்த தரவுமெத்தவாராப்பேராசையென்கோர
மூந்துறவுஞ்செங்கமலவணைமீதுரவுந் திருத்தில்லைதாண்டவரை
சேர்த்தின்பம்பெறவுங் (கனவுக)

பதம்-இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்

பல்லவி.

சொல்லவாராய்சேதி சொல்லவாராய்

அநுபல்லவி.

சொல்லவர்ராய்சேதி வந்தமாயின்னே
தில்லைநடராஜரெனைச் சேர்ந்தமாமையல் சொ

சரணங்கள்.

க, அடுத்தத்தேவந்த யந்தரங்கம்பாராட்டி
துடுக்காகமோடிசெய்தாற் சொல்வதேதுமானே சொ

உ, ஆசையாகினுலென்ன வதிஷ்டமுந்தில்லைவேணும்
பேசவுமறியாத பெண்பேதையானடி சொ

௩, இருவருமொருமித் திருந்தசுகங்களெல்லாம்
ஒருவரறிவாரோ வூரிலொம்மலாகுதே சொ

௪, சம்புசிவகாமி பங்கர்சந்திரசேகரர்
செம்பொன்னம்பலவாணர் சேர்ந்தணைந்தமையல் சொ

பதம்-இ-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

மையல்மிகவுமிஞ்சுதே சுவாமிநீரிப்போ
மருவாதிருந்தாலென்செய்வேன்

அநுபல்லவி.

வையகம்புகழ்தில்லைவணனுயகரேயென்சாமி மருமலர்மெத்தைமீதிரி
ருவருமாயிருந்து சருவிச்சுருள்கொடுத்துமருவிமுத்துமுத்தாட மைய

சரணங்கள்.

க, வரிக்குழியிலேமுழிசை கூவத்தென்றலுந்தாவமன்மதன் மலர்க்
கணைதூவ ஏருக்குமதிதனிலே யுலைவாய்மெழுகதுபோல் உருகு
தென்றனுளம் பரவசமாயுடலம் மருகுதுகாமவெள்ளம் பெரு
குதுவாவா உ, களபகஸ்தூரிகள் பூசித்தேவரீருடன் கலந்திங்கித
மொழிகள்பேச அளகமலர்கள் வீசவணைதனிலே யிருந்து
அந்தரங்கமாகி மந்தனுளமறிந்து சிந்தை மகிழ்ந்து நீயுந்நாளிற்
சேர மை

௩, தில்லை மூதூரில்வாசரே மூவாயிரவர் தினந்தினந்தொழு மீச
ரேவல்லிசிவகாமி மகிழுஞ்சபேசரேமாதவர்பணியும் பொற்பாத
ரே தமிழ்க்கொருநீதரே யெனபிராணரேவாவா வை

பதம்-இ-ம்-எதுகுலகாம்போதி-அடதாளம்.

பல்லவி.

மனதினிற்றயவாறு றினந்தினமிப்படி வருமோவராதோ

அநுபல்லவி.

தனக்குறையுண்டோவென்கிறீர் தேவர்சித்த
மெனதுபாக்கியத்தில்லைக்கனகசபேசரே மன

சரணங்கள்.

௧, உருமத்துக்கமலம்போற்றிருமுகமலர்வானே னொருமனதாயிருந்
தார் பெருமூச்சுவருவானேன் அருமந்தமனதுதான் தெருவெங்
குழலவுதே பெருமைக்குத்தழுவுவதுரிமையேசாமி மன

௨, எவர்மோகந்தனில் வீழ்ந்தெவர்மயமானாலுங் கமரியின்காற்றை
ப்போற்றுவளவேண்டாமோ அவரவரிச்சைவைத்தா னவரசரு
போல்நவபலங்காணுமன்றோசிவகாமிபிராணசயே மன

௩, தயவானாலடிக்கடி சுயமாவரவேணும்பிரிய வார்த்தைபேசினாற்
செயலாவதேது அயலாகவெனைத்தள்ளநியாயமோ தேவர்க்கும
யலார்க்குஞ்சரியே நன்னயசபைவாணா மன

ப-ம்-இ-ம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

பல்லவி.

நினைத்துக்கொண்டால் சகிக்கப்போமோதானே
நிகராகியசாமி செய்யவிந்தையை

அநுபல்லவி.

அனைத்துலகுந்துதிக்கு மம்பலவாணனார்
அந்தரங்கமறிந்தே தக்கவின்பசுகத்தை நினை

சரணங்கள்.

௧, வெடித்தமல்லிகைமுல்லை முடித்தேன்குழலைசீவி
மடித்தசுருள்தந்திகள் கடித்தசமயிரமலீலை நினை

௨, கச்சைநெருடிநெஞ்சை உலைமெழுகாயுருகித்
தலைநெகிழ்த்தியமர்த நிலைசோதித்தவிதத்தை நினை

௩, முத்துஸ்தனத்தின்மேற் கையைவைத்துநகம்பதித்துச்
சித்திரமஞ்சத்திருத்தி முத்துமுத்தாடினதை நினை

௪, நாதரூபமொன்றில்லாச் சோமசேகரர்சிவ
காமசுந்தரிமகி மேமசபேசரின்பம் நினை

ப-ம்-இ-ம்-நீலாம்புரி-ஜம்பைதாளம்.

பல்லவி.

பிரிந்தாலுமறக்கிறதில்லை பெண்ணேநடனம்

அநுபல்லவி.

புரிந்தராம்பலவாணர் பூவணையின்கண்ணே பிரி

சரணங்கள்.

க, சந்தனகஸ்தூரிவகைபூசி மெத்த சரசலிங்கிதலீலைக் சுரதமொழி
பேசி சந்ததமணைந்தால் வெகுவாசியிரவிற்றனித்திருக்கும்பெண்
ணென்மந்தானென்னசீசீ பிரி

உ, ஸ்தனத்தின்மீதி லழுந்தநைந்துநகத்தைக் கொஞ்சிமுகத்தின்மு
த்தம்வைத்துக் குறிபடுத்திய சரத்தைகலைநெகிழ்த்து யுறவர்டும்
விதத்தைநாளுங்கல்வியநுராக மனுபவித்திருந்த சுகத்தைப் பிரி

௩, தென்கலையம்பதியின்வாசாநாளுஞ்சிவகாமவல்லியுடன் பிரியாத
நேசா என்கவலைதீர்க்குஞ்சர்வேசா எங்குமிணை யொருவரில்லாத
ஈசாநடராஜா பிரி

ப-ம்-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

எத்தனைதவஞ்செய்தாரோ மானேதில்லை
ஈசனைப்புணரத்தானே

அநுபல்லவி.

கர்த்தமானத்திரியப் பொன்னம்பலத்திலாடுங்
காரணபூரண வாரணமானவர் எத்

சரணங்கள்.

க, கொக்கிறகைச்சூடுவாருக்கிப்போ கொழுந்தும்வேருண்டாச்சே
மேலும் அக்கரவம்பூண்டமார்பர்தமக்கு ரத்னஆரமுண்டாச்சே
அர்த்தக்கனனுமாமன் றலைபயறிந்தார்க்குத்தாட்சண்யமு
ண்டாச்சே சற்றும்வெட்கமில்லாதிர்வாணிக்குப் பட்டாடைமே
த்தவு முண்டாச்சே யெனம்மா எத்

உ, ஒருத்தருமில்லாதபரதேசிக்கிப்போ துலகெலாமுறவாச்சே பெ
ருமுருந்திராட்சவடஞ் சூடுஞ்சடைக்கிப்போ துயர்பொன்முர
வாச்சே கையில்தரித்தமானகூச்சலைக் கேட்டவருக்கிப்போ சங்
கீதமுண்டாச்சே புரம் சுரித்தெரித்தபருக்குச் செகரட்சகனென்
னுந்தருநாமமுண்டாச்சே யெனம்மா எத்

௩, யானைத்தோலும் புலித்தோலுமுடித்தார்க்குநூடைத்திரளாச்சே
உயர்வானத்தினையும்புலிசூடினார்க்கிப்போது மணிமுடியுண்டாச்
சேமதுமானத்தைமுன்னாசுமந்தார்க்குசைவப்பழமெனப் பே
ராச்சேபெண்கள்மானத்தைப்போக்கினார்க் காசானெனுமொரு
மாபட்டமுமுண்டாச்சே யெனம்மா எத்

௪, மாட்டிலேறித்திரிவார்க்கு வேண்டியவாகன முண்டாச்சேதலையோ
ட்டிலிறந்தேகுடிப்பாருக்கிப்போ துயர்பாத்திரமாச்சேஒருவீட்
டிலிற்குடியிருந்தேயறியாருக்கு விண்போய்மதிலாச்சேசுடுகாட்
டிலாடுவர்க்குத் தில்லையென்றேயொரு காணியுமுண்டாச்சேயெ
ன்னம்மா எத்

ப-ம்-இ-ம்-யமுனாகல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

தெண்டனிட்டேனென்றுசொல்வீர் நடேசர்க்குநான்
தெண்டனிட்டேனென்றுசொல்வீர்

அநுபல்லவி.

அண்டமெல்லாம்பரவுங் கொண்டல்கால்கள்கும்பிட்டே
ஞண்டவரெனுந்தில்லைத் தாண்டவராயர்முன்போய் தெ

சரணங்கள்.

க, பொருந்துங்காதல்கொண்டு பொன்னிதழ்த்தேனுண்டு
இருந்தோஞ்சொல்லவோவிண்டு ஏகாந்தத்தனிற்கண்டு தெ

உ, கண்டால்வரும்போச்சு கன்னிவயதிலேச்சு
பண்டுசொன்னதும்போச்சு பார்வையவன்மேலாச்சு தெ

ந. மன்னும்நாணம்போக்கி மனைதத்தாண்மலரக்காச்சிச்
சென்னிமேற்கரந்தூக்கித் தில்லைபதியைநோக்கித் தெ

ப-ம்-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

மனதறியாமல்மையல்கொண்டேன் கொண்ட
மையலுக்கென்னபலன்கண்டேன்

அநுபல்லவி.

தினமும்கிருபைபுரியும் நேகர்தில்லைச்
சிவகாமிமகிழ்ந்திடுந் திருநடராஜா மன

சரணங்கள்.

க, மனதில் தாய்க்கு வெருப்பாச்சே யினி வாவா நிஷ்டூரப்பேச்சே
நினைத்துக்கொண்டாற்பெருமூச்சே பருவ நேரிழையார்க்கிதெல்
லாமேச்சே மன

உ, மதிகாய்வதென்னகொடுமையோ மாரன்மலர்க்கணையெய்யநூறு
கையோ சதிக்குயில்கூவுதுபொய்யோ நிமிஷந்தா நூறுயுகமாகு
தையோ மன

ந, துதிசெய்துசொன்னதொருகோடிசெய்தசுகலீலைதன்னைமிகநாடி
அதிவிதமாகக்கவிபாடி தில்லையம்பலவாணரைநான்கூடி மன

ப-ம்-இ-ம்-நாதநாமக்கிரியை துருவதாளம்.

பல்லவி.

மனமுருகுது விழிபுனல் பூணுது மையல்பெருகுது மதியனன்மூ
ளுதுவருமுருவிலாசமென்னைத்தீண்டுதுவகையென்னசெய்வேன்

அநுபல்லவி.

அனந்தவரதமுமதிவிதத்தாண்டவ மரவும்புலிமுனிதெரிசித்திடும் ஹரஹரசிவசிவவென்னையாண்டருளம்பலவாணா மனமு

சரணங்கள்.

க, தலமீதொருதாயேன் தந்தை தமரேன்மைந்தர் தாமேன் மலரேன் சந்தனமேன் புநகேன்மையல் சாஸ்வதமேகணேசோருது வனே சோருதுநல்லதைசோருது மெய்சோருது கனஸ்தனம் சோருது பணிசோருது நெறிமுடிசோருதையோ இலையோகிருபை நீவந் தென்னையணையவில்லையோ வீணிதிரந்தரந்திரமில்லையோவினையுயி ர்விடுவேன் பழியெய்துவதினியே. மனமுருகுது

உ. விரகாக்கினிமேனியிலெழுகுதுவேண்டாம்வேழமுண்டகனிபோ ல் ஒருராத்திரிநாறுகமாய் விழியுறங்கேன் துறங்கேன் அருளாற் றினம்பணிவதுமுனையே அருளாற்றெழுதிடுவதுமுனையே அறி வேனறிவேன்கருணாகரதென்புலியூர்ச் சிவகாமசவுந்தரிபாகாவு ன்கருணாகடாட்சமேபுரிகுவாய் கனகசபேசா மனமுருகுது

ங. தசம்பவிதகுணகுணந்தகு தகுதிந்திமிதிமியென நின்றொருசவத ம்பெருத்திருநடனந் தருசங்காரனே நவசந்திர னுதல்போல்விழி தருநவசிந்தையிலுருகியிதம்பெற நவபண்கணையதனின் மகிழ்ந் தெனை நண்பிலணைந்தாள் சிவசங்கரதிரிசூலாதர திரியம்பக திரி லோகநாயகா-திரிபுண்டரஹரமகாதேவதேவராயமூர்த்தி மனமு

முத்துத்தாண்டவர் சபாநாதர்பேரிற்பாடிய

பதம் - முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

# சபாநாதர்பேரில்

தில்லைவிடங்கன்

மாரிமுத்தாப்பிள்ளைபாடிய கீர்த்தனம்

கீர்த்தனம்-இ-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்

பல்லவி.

தில்லைசிதம்பரமே அல்லாமல் வேறில்லைசுதந்தரமே

அநுபல்லவி.

சொல்லக்கேளிதுநெஞ்சே சொல்லுவாய்சிவகாம
வல்லிக்கண்புளசபை வாணன்வீற்றிருக்குந் தில்லை

சரணங்கள்.

க, தோற்றமும்மலவேளைக் காற்றிலிடுபஞ்சாகத் தூற்றியொழித் துக்குறையாற்றி மயக்கந்தீரத்-தேற்றியணையுந் திருநீற்றிறுவிந வினைமாற்றிப்பரகதியிலேற்றிவைப்பதாகுந் தில்லைத்

உ. தத்துவத்தில்லைதெரிந் தொத்தமனதோடிரு கைத்தலமெதிரே குவித் தெழுமிடமீதில்_னைந்தபிறகு பயபக்தியுடனே தெரிசித்தபொழுதி லுயர்முத்திதந்தாளத் தில்லைச்

ங. காளிதனிகயிலாசமென்றொரு நடராஜனிருந்து பவநாசஞ்செய்வ திதிலே வாசஞ்செய்வோர்க்கு மோசம்வராது கிலேசம்வராதே மபாசம்வராது, தில்லைச்

கீர்த்தனம்-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

பல்லவி.

தெரிசித்தபேரைப்பரிசுத்தராக்கச் சிதம்பரமன்றியுண்டோ

அநுபல்லவி.

விரிவுற்றபூலோக மையிலையென்றுள் வொருமித்துடநடந்தெதிர் கொண்டு-மேரு வெகத்திலிரண்டோடிரண்டு கோபுரத்தைதகண் ணாரக்கண்டு தெரிசித்த

சரணங்கள்

க, மேலத்திசைகோபுரத்தினிற் கற்பகவேழமுகன்றனைவாழ்த்தி நல் லநீலத்திருமைமேலுறுங் குமரன்முன்னின்று தொழுதடிபோற்றி அந்நாகூலச்சிவகெங்கை மூழ்கியந்நீரையுட்கொண்டு மனக்குறை யாற்றி-இந்தஞாலத்தைதயீன்றசிவகாமசுந்தரிபாலூற்றிருவினைமா ற்றிவெகுசீலத்துடன்மலர்சாத்தி அர்த்தசாமத்திலேதொழுதேத்தி

உ. நம்பிதிருமூலஸ்தானத்திலேதுதிநாத்தழும்பேறப்பயின்று-உமை அம்பிகைத்தாளைப்பணிந்து மலாதியொடைந்து புலாதியையவென் று நிதமும்பர்வணங்கும் பேரம்பலத்தானைக்கண்டுண்டையாதுஞ் சேவித்தகன்றுகள்ளவெப்பிணிப்பிணி வேரைப்பொடிசெய்யுஞ் செம்பொற்சபைநாடிச்சென்று கொடிகம்பத்தருகில்நின்று கை யால்கும்பிட்டரகராவென்று தெரிசித்தபே

ங. ஞானசபைதன்னைச் சேவித்ததற்குள்ள ரகசியவுண்மையைநாடி யொளியானந்தவற்புத ஞானக்கண்ணாலறிந்தானந்த வாரியிலாடி தத்வமோனத்துடனங்கிருந்து செபங்கணமுழுதுஞ் செபித்தபின்பு நீடி

நாளும் வானத்தவர்க்குங்கிடையாதசபாபதிசிதானத்திற் சேவடி தேடி மெய்த்தியானத்திலதுபாடியமானத்தைவேரறச்சாடித்-தே

கீர்த்தனம்-இ-ம்-ஸ்ரீகல்யாணி-ஏகதாளம்.

பல்லவி.

தெய்வீகஸ்தலமிந்தத்தில்லை - இந்தவைபோகமெங்கெங்குமில்லை

அநுபல்லவி.

துய்யவேதனுமாலுந்தேடியேகாணச் செய்யதாமரை தாளடியேகின்று வையனிருந்து - வாசஞ்செய்யுந் தென்கைலாசமாமே யிணைசொல்லப் போமேவொருவராலே தெய்வீக

சரணங்கள்.

௧, மதிலாயெழுந்துபஞ்சாட்சரமே சுற்றிவளைந்திருப்பதுஞ்சிதம்பரமே போலாஞ்சதுர்வேதநாலுங்கோபுரமேயாகிச்சமைத்துநிற்பதுநிலவரமே-யிதுவதனுலெத்தலத்தையும்வெல்லுமே யுலகம்பதினாலுமிகைத்தானேசொல்லுமே-யார்க்குங் கதிதந்தவிதத்தாலே பதியொன்றையிதைப்போலேகாணேனுண்டென்றுவீணேசொல்லக்கூடுமோ தெய்வீக

௨, மூர்த்தியுந்தீர்த்தமுந்தலமுமூன்று முக்கியமுமொருமித்தநலமுங் கண்ணுற்பார்த்தவர்க்குண்டோசஞ்சலமும் நினைவின்படியே வந்தேயதுஞ் சகலமும்வேதசாஸ்திரமுமிதைத்தானேயேதுமே - நிமிஷந்தோத்திரமாயுரைத்தாலும்போதுமே-யிதிலோர்மாத்திரையாம்போது வீற்றிருந்தாற்றீதுவருமோ பிறவியைத்தருமோசற்றுந்தராது தெய்வீக

௩, எப்போதும்நலந்தருவதுவேயிது வெல்லாச்சமத்துக்கும்பொதுவே-வருதற்கொப்பான தனமினியிதுவே விராட்டுள்ளக்கமத்தானமிதுவே-வச்சிரக்கொப்பாருங் குழைச்சிப்போற் பாகனுரகாலந்தப்பாதவராஷேகனர்தமக் கொப்பாந்தலமதுமெப்பாந்தலமிதுவுண்மையிதினுள்ளவண்மையின்னமநந்தம் தெய்வீக

கீர்த்தனம்-இ-ம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்.

பல்லவி.

எந்தத்தலத்தையுமிந்தத்தலத்துக கினிசொல்லக்கூடாது ஐயன்

அநுபல்லவி.

மசாநதத்தலஞ்சிதம்பரமென்று மதிந்சிந்தித்துகருமலைபோலே எதிர்வந்திட்டமுயல்கனமேலே ஆனந்தக்கூத்தாடினதாலே எந்த

சரணங்கள்.

க, ஆதியில்வெண்குடன்தந்துகவுடதேசத்தரசன்பொன்னிறமானான்
தேகம்நீசச்சாதியின் மூவர்புலைத்தன்மைபோய்க்கதிசார்ந்தாரது
வேதெய்வீகம் ஒருவேதியன்வாயிலோர்சோறிட்டுக்கூடுபோம்வீ
ட்டிற்புகுந்ததுகாம்பின்னுமதீதருகவந்தாலெப்போது துந்தரிச
னம்செய்திடுமோர்புலிநாகம் - மூன்னம்பெய்தது பொன்மழை
மேகம் இந்தவைபோகமின்னமனேகம் எந்தத்தலத்

உ. கழுகுபுசிக்கத்தவறிபிறந்த கயலுவையடைந்தது கதியேநீரின்மு
முகியெழும்பலவிளமையைத்தந்து முதுமையைத்தீர்த்த திப்பதி
யே கூவியாதபுலி குட்டியுண்டிளப்பாறயருகில்வந்ததுபயோ க
தியே-கொலைபழிசெய்யும் பார்ப்பானொருவனுக்கு முத்திபாலித்
தையன்சந்நிதியே-அதனாலிதையே தினந்துதியே செய்துமேலிட்
டுச் சொல்லும்சுருதியே

௩. எங்கெங்குந்தானிதைப்பூலோகக் கயிலாசமென்றுரைப்பாரொ
ருபேரும்-இதிலங்கமிரந்துதிரும்பிப்பிறப்பாரோ வாடியதாளைக்
கண்டோரும் மலர்ப்பங்கயன்மால்முதலோர்வருந்தருச்சனைபண்
ணுகிறாரதைப்பாரும்-ஒளிபொங்குந்தொளாயிரத் தொண்ணூற்
றொன்பதுபங்குக்-கலையிதிலாருந்தலமெங்குமோர் கலைசாருமது
வுமிங்காத்தசாமத்திற்சேரும் எந்தத்தலத்

கீர்த்தனம்-இ-ம்-பியாகடை-ஆதிதாளம்.

பல்லவி.

எந்நாளும்வசமாய் சிதம்பரஸ்தலத்திலே இருக்கத்தவஞ்செய்தே

அநுபல்லவி.

பன்னகம்புலிகாகம் பார்ப்பான்புலையன்முதற்
பத்திசெய்தேயிதின் முத்திபெற்றிடலாமே எந்நாளும்

சரணங்கள்.

க, முத்தியன்னையுதானிலேகருவித்துதிருவயறுநொந்து பசியொடுபி
றந்துநிலமிசை-தவழ்ந்துளறநடைநடந்துபருவமாகி இந்தமனை
மனைவிமைந்தர் நிதிபலவுமெந்தனுடையதுசொந்தமெனவேசொ
ல்லின் சிந்தைதனின்மதமிகுந்துபலபலகவந்தைகளேசெய்துதிரி
ந்ததல்லாமல் எந்நத்

உ. வட்டஸ்தனத்தில்தொங்கவிட்டபணியழகும்ஒட்டிவச்சிரமிழைத்
தசிட்டியழகும் நுதற்பொட்டழகு மிடையிற்பட்டழகுமிடைய
கட்டழகியாவலையிற்சிட்டியறிவழிந்துமட்டியெனவே தொடர்ந்
தொட்டினின்மொய்த்தசிறுசிட்டெனவேயவர்கள்தொட்டுமுய்
கிலகப்பட்டுமிகவும்மதிகெட்டுமெலிந்தலைந்ததிட்டதல்லாமல் எந்

௩. தேசமதற்குமொருகாசுகொடுக்கப் பிரையாசமனத்தர் தமைப் போற்சனனுத்துதிசெய்தாசுமுதற்கவிகள்பேசியலுத்துமனக்கூசு வசையல்லாமல்யீசனைதிகைப் பிரகாசனிருமத் தாசனுமை மகிழு ல்லசானடியவர்கள் நேசனில்குகைலாசன் கனகசபைவாசன்பி லிசைநடராஜனைச் சேவித்து. ஏக

கீர்த்தனம்-இ-ம்-மத்தியமாவதி-ஏகதாளம்

பல்லவி.

பலமந்திரத்திற்கும் பலமந்திரமபொன்னம்
பலமன்னும் மந்திரமே.

அநுபல்லவி.

புலவர்க்கும்முனிவர்க்கும் பலவர்க்குந்தியானிக்கப்
பொதுவாயிருக்குமந்திர மதுவேகருக்கமந்திரப் பல

சரணங்கள்.

௧. செனனமரணவாதை நீக்கியமந்திரஞ்சேருமும்மலமாயைபோக் கியமந்திரம் மனதில்மெய்ஞ்ஞானமுண்டாக்கியமந்திரம் மந்திர த்திற்கெல்லாஞ் சிலாக்கியமந்திரம் பல

௨. முதுமைபோயிளமை கொடுத்திட்டமந்திரம் மூன்றுபுலையர் தோச ம் விடுத்திட்டமந்திரங் கதியிலோர் கண்காகமடுத்திட்ட மந்திர ங்காட்டுப்புலியைப்பாம்பை தடுத்திட்டமந்திரம் பல

௩. அதுவேயெவர்க்குங் காயசித்திக்குமந்திரம் அதுவே நினைவின்படி சித்திக்குமந்திரம் அதுவேயழிவிலாத முத்திக்குமந்திரம் அதுவேசிதகித்த நெஞ்சிற்றித்திக்குமந்திரம் பல

கீர்த்தனம்-இ-ம்-மோகனம்-சாப்புதாளம்.

பல்லவி.

பரந்தனையணைந்திடவேணுமென்றாற்சிதம்
பரந்தனையடையுங்கள் மாந்தர்களே

அநுபல்லவி.

வரந்தனைதருநிந்தத் தலந்தனிலேயிருந்த
பரந்தரெல்லாருந்தவ வேந்தரே பர

சரணங்கள்.

௧. காட்டிலிருக்கின்றபுலியும் பாம்பும்பெற்ற காட்சியுங் கேட்டிருப் பீர்களே வீட்டிலிருக்கின்ற காகமுமுயர்ந்தமேல் வீட்டினைற்செ ன்றதுங் கேட்டிருப்பீர்களே வேந்தரே பர

௨. சாதியிலீனமுள்ள புலையர்மூவரிதிற் றனித்தனியே புனிதராக்கி னர் வேதியரிலதிகபாவியொருவரிதின் மேவிப்பிரந்தியிலேகினர்

௩. 'வெள்ளியினுலெங்களைய ளிருக்கச்செய்ய வீட்டை வடகைலைய தென்பாரே தெள்ளிய செயபொன்னினுற்செய்த வீடிதனைத் தென்கைலாச மென்பாரே. பர

கீர்த்தனம்-இ-ம்-ஆரபி-ஆதிதாளம்

பல்லவி.

'ஒருக்காகில் சிவசிதம்பரமென்றுநீசொன்னுலிருக்கா தூழ்வினையே.

அநுபல்லவி.

கருக்காராருக்கிதுவெரியும் பொதுவிலொரு
காலைத்தூக்கிநின்ற கோலத்தைமனதில்வைத்தொ

சரணங்கள்.

௧. சூழ்வலியுடையபஞ்சாக்கினியிடைநின்று சொரூபங்கரிவானேன் மனை வாழ்க்கைவெறுத்துக் கனிகாயுண்ட சருகுந்தின்று மாசவபுரிவானேன் பலவேள்விசள்செய்தந்த வோமகுண்டத்தினெய்யை வீணிலேசொரிவானேன் காதுமகேள்விக்காத புழுமுனிகளாய்த் தலையிற்களைத்திட்ட சடைதனைவளைத்திட்டுத் திரிவானேன் ஒரு

௨. வேதமந்திரஞ்சொல்லி யாயிரத்தெண்டன் புவிமீதினில் விழுவானேன் இருபாதமுஞ் சிவந்திடத் தலங்கடோறுந்திரிந்து பலதெய்வந் தொழுவானேன் சொல்லனுதந்துருத்திபோலேவாயுவை கும்பித்துடல யோகத்திலெழுவானேன் ஐந்து பூதங்களுங்கலங் கலங்கப் பிரதட்சணமாய்ப் புரண்டுபுரண்டு மதிமருண்டெழுந் தழுவானேன் ஒரு

௩. உடுக்கியுடலை மெத்தவருத்தியுறக்கத்தையுமுணையுந் துறப்பானேன் சிலை யளைக்கல்லா நிலாணியாகிலோக வாழ்க்கையனைத்தை யும்மறப்பானேன் வருநரைக்குந்திரைக்கும் கற்பமுருந்திச் சித்தர்களாகி நாடெங்கும பறப்பானேன் சபைத்திரைக்குள் மறைவாகிபிக்கும ரகசியத்தின் திறந்தெரியாமல் வீணேயிறந்தின்னம் பிறப்பானேன்.

கீர்த்தனம்-௭-ம-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

சிவசிதம்பரமென்று நினைப்பாயே உனக்
கபசெயம்வராதென்று மனப்பேயே

அநுபல்லவி.

தலைசமுமுனக்கிதென்றறிவாயே நல்ல கனகசபையிற்புலி பனகமுனிவர்கள்தொழுவனவரத நடனந்தனையாளுேடு சிவ

சரணங்கள்.

௧. சன்மவினைபொய்களையறலாமே பொல்லா மன்மதவாதைதீர்ந்து தேறலாமே சென்மசாமரக் கரையேறலாமே யெழுந்து செல்

ப்போதிலுஞ் சும்மாவின்றபோதிலு மொன்றைநினைந்தபோதிலும் படிக்கின்றபோதிலுநீ சிவ

௨. மனிதருறவைமெய்யென்றிருக்காதே கதிர்முன் பனியானவாழ்வைச் செல்வஞ்செருக்காதே தனிவேதமந்திரமீதைச்சிரிக்காதே பசிதந்தவேளையு மிடர்வந்தவேளையு மனம்நொந்தவேளையும் பின்னொந்தவேளையும் நீ. சிவ

௩. ஒருமந்திரத்தையும் நீசெபிக்காதே யிந்ததிருமந்திரமன்றி யொன்றும் லபிக்காதே கருமந்தப்பிதஞ்செய்து தவிக்காதே நிலைக்காட்டி நிலையன்செய்த வட்டினிலுறுதியை நாட்டிடு வொன்றிலு மாட்டினில்லாதே சிவ

கீர்த்தனம்-இராகம்-செஞ்சுருட்டி ஆதிதாளம்.

பல்லவி.

இன்னமுமொருஸ்தலமிருக்கு மென்றெருக்காலே
தினமலைக்கிறாய் மனதே

அநுபல்லவி.

சொன்னசொன்னஸ்தலங்க ளெங்குமோடிக்களைத்துச்
சோதித்தறிந்தாலிந்த ஆதிசிதம்பரம்போல்

சரணங்கள்.

௧. சாக்கரையுந்தேன்பாகுஞ் சரியாய்நிறம்பெற்றாலுஞ் சர்க்கரைருசிமாவிலிருப்பது பிரயாசம் முருக்கரஞ் செம்பரத்தையும் நிறமொன்றானாலுமந்த முருக்கினிலுண்டோவாசம்

தரிக்கும்வர்ணரக்கல்லுந் தாறுப்புமொத்திருந்தாலுந் தரிப்பைத்தனிவச்சிரந்தனைத தரிப்பதில்லாசம் உரைக்கும்ஸ்தலமனந்தந்தரைக்கு ளிழிந்திட்டாலும் மும்பர்வந்துதொழும் பொன்னம்பலமே கைலாசம் இன்

௨. உப்புங்கர்ப்பூரமு மொன்றைப்போலிருந்தாலு மெங்கும் பெரியதாய்க்கர்ப்பூரந்தனைச்சொல்வாரோ இப்புவியிலெவர்க்கும் யோக்கியந்தருங் காவிரிக்கேற்பது சணைஞரோ
குப்பமிதாய்விளங்குந் தெய்வீகநங்கையாற்றுக் குவளையெடுத்துரைப்பதுவர்க் கழியாற்றுநீரோ அப்படிபோலனேகஸ்தலமிருந்தாலுமந்த வல்வினைதொலைக்குந் தில்லைப்பதிக்குநேரோ இன்

௩. விண்ணுலகத்திலுமீனினமெல்லாங்கூடி வெண்மைநிறமாமொருதணமதிமுன்னில்லாது தண்ணுலவியவல்லிகிரளாய்ப் பூத்தாலுமொருதாமரைக்கொவ்வாது

மண்ணுலகத்திலுள்ள தருக்களனைத்துங்கூடி மருவுலவுங்கற்பகத்தருவுக்கிணைவராது புண்ணியஸ்தலங்கள் பலவிருந்து நடேசன் வாழும்புண்டரீகபுரம்போற் கண்டுசொல்வேறேது இன்

கீர்த்தனம்-இ-ம்-ஏதாருலகாம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

காலைத்தூக்கிநின்றாடுந் தெய்வமே , என்னைக்
கைதூக்கியாள் தெய்வமே

அநுபல்லவி.

வேலைத்தூக்கும்பிள்ளை தனைப்பெற்றதெய்வமே
மின்னும்புகழ்சேர்தில்லைப் பொன்னம்பலத்திலொரு

சரணங்கள்.

க. செங்கையில்மான்றூக்கிச் சிவந்தமழுவுந்தூக்கி அங்கத்திலொரு பெண்ணை யதினந்தூக்கி நங்கையைத்திங்களைக் கதித்தசடையிற் றூக்கி இங்குமங்குமாய்த்தேடி யிருவர்கண்டறியாத காலை

உ. நந்திமத்தளந்தூக்கி நாரதர்யாழ்தூககத் தொந்தமென்றயன்றாளஞ் சதியொடு தூக்க சிந்தைமகிழ்ந்துவாணோர் சென்னிமேற் கரந்தூக்கமூந் தும் வலியுடைய முயலகனைத் தூக்க காலை

ங. கும்பமண்டலத்தைத்தூக்கக் கொடுங்கைகும்பத்தைத் தூக்கப்பைம்பொற்சுவர்கொடுங்கைப் பாரத்தைத்தூக்க எம்பிரபாரத்தைவிராட்டி தயகாமனைதூக்கச் செம்பொன்னம்பலத்திலே தெற்குமுகமாயொரு காலை

கீர்த்தனம்-இ-ம்-புன்னாகவராளி-ஏகதாளம்.

பல்லவி.

உன்முகம்பார்த்தபுயமென்று லென்முகம்பார்த்தருளமூ
றென்முகமாயிருப்பதென்ன வைம்முகத்தையாவே

அநுபல்லவி.

மின்முகம்பார்த்தாடுந்தில் மேவுநடேசரேயருக்கன்
தன்முகம்பார்த்திடவிரும்புந் தாமரைபோலுன் விருப்பி உன்

சரணங்கள்.

க. பார்க்கோவந்த விருந்தெனவே யறியாதுபோலிருந்தார் பார்க்கிறவர் வாரினியென்பரிதாபமுழுதுநீ தீர்க்கிறதெய்வ மறுதெய்வ முனையன்றியுண்டோ நீர்க்குமிழியாக்கைசினை நீக்குமுன் வந்தாட் கொள்ளவயென உன்

உ. தூக்கியதாளினைமுடிமேற் சுமக்குமுயலகன்போலப் பாக்கியன், செய்யாத கொடும்பாதக மூதலினாலே கூக்குரல்செய் தோலமிட்டுக் கூவியுன்றன் கோயில்தனைநோக்கி வலமாகவந்துநூறுதெண்டனிட்டிடமுந்த உன்

ங. காரினிற்பூங்கமுகு பொடுங்காவனந்தமேவு புலியூரினிற் காண்பவர்க்கு முத்தியுதவும் நடராசர் பாரினிலிவ்வுருவெடுத்துப் பத மலர்கொளாகாம நீரிலம்போலே நிலைகலங்கித்தலைவணங்கி உன

கீர்த்தனம் இ-ம்-சாவேரி-திரிபுடைதாளம்.

பல்லவி.

ஏதுக்குதவியிந்தக்காயம் சுமந்ததினால் வருவதேதாயம்

அநுபல்லவி.

சீதப்பிறையணிசோதிச்சடைமுடி தேவன்புலிசையினமே
லம்பலவன் பொற்பாதம்பணிவிடைக்காசித்தயஞ்செய்து
பவத்தையொழிக்காமலவத்திலேபிறந் ஏது

சரணங்கள்.

க. தருமராசன்கடிக்குக்கட்டைபிரமன்கைக்குமென்பதுபிற்றைச்
சாட்டை-கிருமிகட்கொரு கன்மகுட்டை காலன்கிட்டும் போ
தினிலொடலொட்டை- வருமேவிதை பொய்மயன போர்க்கும்
பொரும்பழிமாங் கிஷமுஞ்சீயும்வருப்பும்நிறை குழியாருமையி
ன்பிடுமதனை யொழியொழியாம் நம்பொறுது நீரின்மேற்குமிழி

உ. விஞ்சுமும்மலஞ்சேரும் விடுபுல்வேடரைவரிக்குங்காடு கஞ்சிதப்
பழமக்ககார்கூடு-இதைச்சதமென் றெண்ணுவதெல்லாங் கேடு
மஞ்சின்மேல்விடுவான் வல்வினை கூறும்வாழ்வைநிலையென்று ம
யங்கித் தினந்தோறுந்துஞ்சிலைப்பொறிகலங்கி மதிமாறுஞ் சுவா
சமடங்கினாற் றொடக்கூடாது நாறும் ஏதுக்கு

௩. கொடுவிளைமுளைக்குந்தோன் மூட்டங்கழுத்தொடும் நாய்நரிக்கு
ம் விருந்தூட்டஞ் சுடுகாட்டைக்கினிக்கிலிகாட்டக்கிளுக்கிடுகா
ட்டமந்தச்சூட்சம பாக்கிடில்பொம்மலாட்டம் விடுவிடுருவெடுத்
திடும தனிமுன்னை வினைக்குக்கிருபைமந்தளிக்க வல்ல எண்ணை
பண்டாரும் மெய்யன் பொன்னம்பலவனடிதன்னைப பணிந்தாற்
பிறவிநோய்தணிந்து போமபின்னை.

நிந்தாஸ்துதி.

கீர்த்தனம்-இ-ம்-ஆரபி-ஆதிதாளம்.

பல்லவி.

என்ன துணிவாய்நான் பயப்படாமல்வந்துன்
னிணையடி பணிவேன் ஐயா

அநுபல்லவி.

பொன்னம்பலவாணனே முன்னமுன்றனைப்பாடும்
புலவனை நீவிழுங்கும் புதுமையைக்கேட்டிருந்தும் என்ன

சரணங்கள்.

க. பாய்கிறமாடென்று வாயில்மேவுதே பாம்பும்புலியுமிரு பக்கமுந்
தாவுதே பேயும்பூதமு முன்னும்பின்னுமுலாவுமே பிடித்தவளை
வானண்டம் வெடித்திடக்கூவுது. என்ன

ராழுந்துவிட்டோர்க்குமழற்றிழம் பாகுமுன்னுறுதப்புதே கோடியென்லேக்காடு நீ குடியிருக்கப்பொறுப்பு ஒழித்திருக்காதெப்போதுமுன்னெஞ்சிற்கருப்புவனைத்தான் புத்தனென்பதை நினைத்தாற்றேன் றும்விருப்பு . என்ன

௩. ஆதியின் மாலையனுமடிமுடிதேடுவோனையாதியந்த மில்லானின்றுமையபாடுவோனைபாதிமதியைச்சடமிதினிற் குடுவோனைபாதத்தைதூக்கிபொன்னம்பலத்தினின்றுடுவோனே.

கீர்த்தனம்; இ-ம்-காம்போதி, ஆதிதாளம்

பல்லவி.

வீடும்பலமாகிநீருமந்தரமாகீவேலைப்பெல்லாப்பாகியோ

அநுபல்லவி

காடுங்காணியாகியோரோடுங் கைபிற்கொண்டீரோ
கனகசபைநாதரேபக பஷணரே (வீடு)

சரணங்கள்.

௧. உளக்கனிவாய் பலவுயிர்களுக்குப்படி தா னளக்கிறமைத்தானன் வந்தருகினிலிருந்து இளக்கறியாமற் செக்கெவீராழியாலரத்தை யளக்குஞ் சீமாட்டி சொந்தமனையாட்டியாயிருந்து. வீடு

௨. ஈட்டும்பற்பலநிதிகளெல்லாந் தலைவனுக்கூட்டுங் குபேரனிங்காத தோழனென்றிருந்தும்-பூட்டகம் செவிபோச்சேறுவபாய்புக்குள்ளேயுன்ற-நட்டாமல்மடங்கியவரைப்புடம்பா நீரையா வீடு

௩. வெள்ளைப்பிலுக்கைப் பார்த்தாய் மேகப்பூர்சக்கரமனுள்ளிலும் புறம்பிலுமொன்றிலுமில்லையே வெள்ளிமென்மலைபோலெங்குமிருப்போனென்றிருக்காலே-தள்ளிக் கூத்தாடினீரே சொர்னசபைநாதரே. வீடு

கீர்த்தனம்-இ-ம் சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

என்னைபிழைப்புன்றன் பிழைப்பயாயிதை
யெண்ணிப்பார்த்தாலார்க்குமழுப்பையா

அநுபல்லவி.

அன்னங்கண்டறியாமற் சொரூபமும்மாறினீர்
ஆட்டையெடுத்துத்தணிக் தம்பலமேறினீர் - என்

சரணங்கள்.

௧. கூடைமண்சுமந்துண்ணப்பரிந்தீரே முனிவர்கொண்டபெண்களை பதுகிலுமிந்தீரே ஓடெடுத்திரந்துண்டுதிரிந்தீரே பசியாயொருவன் பிள்ளையைக்கழுத்தறுத்தீரே-வேடனுகி விஜயன் வில்லாலடிபட்டீரே காடேகுடியிருப்பாய் கல்லாலடிபட்டீரே. என்

௨, பெண்டாட்டிமூழ்கிலிதானுர்சே-பெற்றபிள்ளைதகப்பன் சாமீயா ய்ப்போச்சே-பண்டாமைத்தினன்தாதனெனும்பேராச்சே-யாரும் பழிப்புக்கிடமாச்சே சாம்பன்மேற்பூச்சே-அண்டர்க்கரியகூத்தையாடியுமக்கிங்கே-யெண்டிர்ற்றழியா மூவாயிரத்திலொருபங்கே. என்ன

கீர்த்தனம்-இ-ம்-புன்னுகவராளி-ரூபகதாளம்.

பல்லவி.

உம்மைப்போலாட்டையெடுத்தம்பலத்தினிற்பா
ரொருவரைக்காணேனையா என்ன

அநுபல்லவி,

செம்மைமலர்த்திருவாழுஞ் சிதம்பரநாதரே
நின்னுமொருபிள்ளை கொன்றபழிகாரரே-உம்

சரணங்கள்.

௧, யானைத்தோல்புலித்தோ லாடையுண்டத்தாட்சி-பதுவல்லாவெனும்மைக் கோத்தணிந்ததற்குச்சாட்சி - மானைக்கையிற் பிடித்தவாறே யுமக்குத்தாட்சி-மழுவெடுத்தது மெய்யாச்சோ கழுக்குச்சேற்றகண்காட்சி உம்மைப்

௨, கிடையிற்கிடந்தவாயனடியை மெள்ளத்தேடிக்-கிட்டும்போதுமச்சானென்றெட்டிநீருறவாடி அடவிப்புலியும்பசம்புமறிந் தொருமித்துக்கூடி-யாட்டுக்காலுக்கொட்டுப்போட்டிருக்குதேநாடி உம

௩, வெற்றிவிஜயன்பன்றி விருப்பியடிபட்டீரே-வேடன்வாய்த் தணை யெச்சில் வேண்டிருசிகண்டீரே சிற்றிடைச் சிவைப்பாசஞ்சேர்த்துத்தானே கொண்டீரே சிதம்பரேசரே யாட்டாற்றிருமேனி துவண்டீரே. உம்மைப்

கீர்த்தனம்-இ-ம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்வயிரமுன்னநெஞ்சிலேயிருப்ப
தென்னகாரணத்திற்கையா

அநுபல்லவி.

தன்னந்தனியனுகிப் பொன்னம்பலநேசனே
ஜலப்பிரளயகாலத்திற் சர்வசங்காரஞ்செய்தும்-இன்ன

௪. கருப்புவின்மதன்சண்டைக்கெதிர்த்தபோது மனக்-கருப்புத்தீர கண்ணோர்வளைந்ததுவும்-நெருப்புப்போலே சீறிவந்திடுங் கொடுங்காக-நிலத்தில்வீறிவிழ வுதைத்தும் மருப்பக்கவரியிற்றைக் கிழித்துப்போர்த்தும் பொல்லா-மந்தவணிர்சிதைத்ததுவும்பொறிப்பைபறித்தசைக்குமரக்கனைக் கானகத்தாற்பூமி தனிலழுந்தப் புதைத்ததுவும் போதாமல் இன்னம்

சேரலாதிரிபுரம்வெந்தீற நீராகச்சிரித்து மனதின்படி முடித்ததுவும்-வேறு-னருக்கன்பல் முறிந்துபலபலென்று -விழுந்திடக் கன்னத்திலடித்ததுவும்-யாரையும் செயம்பண்ணித் திக்குவிஜயன் பெற்ற மந்தகாசூரனை மடித்ததுவுங்-கோரநரசிங்கத்தை வீரசிம்புள்ளாய்வந்து கொத்தியிழுத்தாத்தங் குடித்ததுவும்பத்தாமல

௫. தங்கோமீறநதுமத மிகுந்துமசஞ்செய்தக்கன் தலையை யறிந்தழவிற்றித்ததுவும் பின்னும் தக்கனுக்கு மருகனென்னுஞ் சந்திரனை பிலவெறிங்கிடங்கால்ற்றேய்த்ததுவும் அன்னந்தனைப்பரியாயேறும்பிரமன்றலை-யைந்திலொன்றையறுத்துச் சாய்த்ததுவும்-வன்னம்பலவாயுள்ள பொன்னம்பலவாணரே வலியச்சலந்தானை மாயத்ததுவுமல்லாமல் இன்னம்

கீர்த்தனம்-இ-ம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி.

எந்நேரமுமொருகாலைத் தூக்கிநொண்டிக்கொண்
டிருக்கிறவகையேதையா

அநுபல்லவி.

பொன்னுடர்போற்றுந்தொல்லைநன்றோடோத்தூந்திக்லைப்
பொன்னம்பலவாணரே மின்னந்தானுமூன்றுமல் எந்

சரணங்கள்.

௧, எக்கியநெருப்பவிக்கத் தக்கன்வீட்டினடந்ததோ-எமனை யுதைத்தபோதெதிர்களுக்கேரிநொந்தே - சிங்கெனவேபிடித்துச் சந்திரனை நிலத்திற்றேய்த்த போதினிலுறைந்தோஉக்கிரசாமுண்டியுடன் வாதுக்காடியசைந்தே உண்டநஞ்சுடம்பெங்குமூரிக்கால்வழி வந்தோ தக்கபுலிபாம்பிருவர்க்குங் கூத்தாடியாடிச் சலித்துத்தானோ பொற்பாதம வலித்துத்தானோ தேவரீர் எந்நேரமும்

௨. பொருட்பெண்ணிடத்திற்சந்து போனத்தினாற் றுண்டோ பொல்லா-மூபலகைன்மேல்வைத்த போதினில்கலிகண்டோ அருச்சுனன் னுடன் கட்டிக்கீழ்மேலாய் விழுந்தபோததிர்ந்து நரம்புறண்டோ ரசிசிரசிற்றண்ணீரேறித் தேகத்தில்வாதங்கொண்டோ -சேர்க்குந்தோழன்போதுமக் கேற்கவேமுடமுண்டோ - எருதின்மேலே பெண்சாதிதனையுந்தூக்கிக் கொண்டுபோய்த் தேறும்போதிலொருகாற்றுளு மாறுப்புரண்டோ. எந்நேரமு

அநுபல்லவி

எம்பலிற்கொன்றைசூடுஞ் சிதம்பரேசரேயுமது
மார்க்கத்தையெல்லாமுன்றிப்பார்க்கப்போனால்கூத்தாச்சே அ

சரணங்கள்.

௧. பெண்டிருடன்பிறந்தமைத்துனனுக்கருமைப் பிள்ளையைப்பா
ர்த்துக்கண்ணூற்சுட்டீரே பின்னுங்கண்டோர்நகைப்பதற்குப்பெ
ண்கொடுத்தமமானைக் கழுத்தையறுத்தழவிட்டீரே உமக்குண்
டானகுணந்தானோ வேதமெல்லாங்கூறோன் றன்னொரு தலைத
னைக்கொய்துவிட்டீரே சடைபண்டாரம்போல் வந்துகுழந்தை
யையறுத்துண்டபசியாளி வயன்றேவரும்பழிக்கத் தலைப்பட்டீ
ரே அம்

௨. போரிட்டெதிர்த்தாநூகில் வந்தமுப்பிரத்தாரைப புன்சிரிப்பாலே
குடிகெடுத்தீரே வயதிரெட்டும் நிறைந்தபின் மார்க்கண்டனைக
தொடர்ந்தவேமனைச் சொற்புரட்டினாற்றடுத்தீரே முனி வோரிட்
டமுதின்சேருமாதர்கள் மயக்கங்கொண்டுடைகுலைந்திட வேட
மெடுத்தீரே பன்றி வீறிட்டுவரும்போது கூரிட்டகணைகொண்ட
விசயனுடன் வேடன்போல் வீண்சண்டைதொடுத்தீரே அம்

௩. செம்மனக்கிழவிதந்திடும் பிட்டைத்தின்றுவேலைசெய்யாமல் வி
ளையாடிகுதித்தீரே அதற்கும்மைப்பிரம்பினாலே யரசனடித்தால
னைத்துயிர்க்குமடிபடவித்தீரே எங்களம்மைசிவகாமியிணைபிரி
யாதிருந்து மழுந்தர்சிரசிலோர் பெண்மதித்தீரே அன்பர்தம்மை
வந்தாண்டருளுஞ் சிதம்பரேசரேநீர்தான் தாண்டிமுயல்கனைத்
தீண்டியேமிதித்தீரே. அம்

கீர்த்தனம்-இ-ம்-சுருட்டி-சாப்புதாளம்.

பல்லவி.

எதுக்கித்தனைமோடிதானுமக்கென்றன்மேலையா

அநுபல்லவி,

பாதிப்பிறையிச்சடையிற்றரித்தபரமரே தில்லைப்பதிநடேசரே

சரணங்கள்.

௧. ஆட்டுக்காலெடுத்தம்பலத்தினின் றீரதனைச்சொன்னேனோ ஒற்
றைமாட்டுக்காரரென்றுருடறுகிலும் வாய்மதஞ் சொன்னேனோ
தலையோட்டிலே யிரண்டிரண்டிரென்றந்த வுண்மையைச் சொன்
னேனோ பல்லைக் காட்டிலேமுப்புரத்தார்முன்னே நின்றகதையுமெச்
சினுண்டதையுஞ் சொன்னேனோ எது

௨. சாதியுந்தாயுந்தகப்பனு மில்லாததனியரென்றேனே பெண்ணுற்
பாதியுடம்பாகிக் கள்ளுஞ்சுமந்திட்ட பறையரென்றேனோ சாதி
பேதமாய்ப்பிள்ளைக்குக் குறவர்வீட்டிற் பெண்கொண்டிரென்

றேனே மறையோதிவணங்கு நடேசரேயும்மை நானொப்பாருமி
ல்லாத தப்பிலியென்றேனே ஏது
௩ அமுந்தவேலபிரம்படிப்பட்ட கூலியாளரென்றேனே தசைகழிந்த
கவளெலும்பணிந்த பயித்தியக்காரரென்றேனே, கட்டப்பழந்
துணியின்றித்தோ லுடுத்ததைப்பழிப்புச் சொன்னேனே சிறுகு
ழந்தையைக்கொல்ல ஆண்டியாய்வந்த சூட்டெல்லாம் வெளிவி
ட்டுச்சொன்னேனே ஏது

கீர்த்தனம்-இ-ம்-கேதாரகௌளம்-ஆதிதாளம்

பல்லவி.

பாருங்கள்வந்து பாருங்களாட்டுத ம்பாம்புபிடாரனையே

அநுபல்லவி.

ஆருப்காணவேதில்லை யம்பலத்தில்வேடிக்கை
யாலேபதமுயலோன் மேலேவைத்தவேடிக் பாரு

சரணங்கள்.

௧. ஆரூரிற்புற்றிடமமர்ந்திருந்ததுப்போச்சு ஆபரணமாய் மெய்யி
லணிந்ததும்வீண்பேச்சு காரூரில்விடமுண்ட கதையைசொன்
னேலச்சு கைச்சிலைக்குக்கயிறாய் கட்டியதுமென்னாச்சு பாரு
௨. சுகுணத்தகாவித்தை கற்றதனலென்ன கற்றுமெத்தவும்வல்லசித்த
னாகியுமென்ன சகலமந்திரத்திற்குந் தலைவனாகியுமென்ன தலையிற்
கட்டிச்சேற்ற பச்சிலைவைத்திருந்துமென்ன பாரு
௩. மைகண்டமடந்தைகாணக்கைக்குள் மழுவைவைத்து மாயவுயி
ராயும்பந்தைக்காயச் செய்யினமறைத்துற் தக்கதொழிலுக் கேற்
றகொக்கிறதைத்தரித்துச் சபைக்கேற்றகூத்தாடச் சமர்த்தனெ
ன்பதையுற்றுப் பாரு

நிந்தாஸ்துதி.

பம்-இ-ம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

பல்லவி.

என்னகாரியத்துக்கிந்த பேயாண்டிமேல்
இச்சைகொண்டாய் மகளே

அநுபல்லவி.

தன்னேரொருவரில்லாப் பொன்னம்பலவன்கண்ணில்
தழலைக்காட்டியெவாக்குந் தழலைக்காட்டுவானோ என்

சரணங்கள்.

கர்டுஞ்சஞ்சாரம்வீடொன்றில்லாமல் வேரேகானோனுஸ்தியென்
றொருமாடேயல்லாமல் ஓடிபிரந்தான் பசிநில்லாமற் பின்னுழுண்

உ

சிவமயம்.

இஃது-வைத்தீசுரன் கோயில்

குமாரசாமிகவிராயர்பாடியது.

சொர்க்கபுரி அர்த்தமுள்ள

கீர்த்தனம்-இ-ம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்

பல்லவி.

ஆடவெடுத்தபாதம்-நம்மை-யாளவெடுத்தபாதம்

அநுபல்லவி.

சேடவிழ்கஞ்சவாவிசூழ்ந்தில்லைநடராசர்-சுகமிமைத்துயி
ரைவருத்தும் பஞ்சமலர்த்-தொந்தகமலர்த்தொந்தோந்தொந்
தோந்தொந்தோந்தோமென் றாடவெடுத்த

சரணங்கள்.

க. பறவைநுழைந்திடுங்குடம்பை- அரவரி-போற்பவசாரத் துழலு
டம்பை உருதியெனும்மடமைமாற்றிவிடிய வழியுளஞ்செல்லாம
லேதேற்றி கரையேற்றி மறலியை வென்றவெற்றிக் கழல்கனீர்
கனீரென்ன-மலர்க்கையேந்தும்வன்னி தகதகதகென சருவசா
க்ஷிபாய்நின்று-நடனநதொழுதவர்க்கிகபரசெல்வந் தருந்தருந்-த
ருந்தருந்-தருந்தருந்தருமென றாடவெடுத்த

உ. பொய்வகைமதங்களைப்போக்கி-வேடமும்நீறும்-பொருளென்று
மெய்மையையுண்டாக்கித்- தெய்வத்தொழிலைந்துமிலங்கத-தேவி
மேல்வைத்த-திருவருட்பார்வைதுலங்க கலிவிர்கத் தூய்மலர்சி
லம்பு கலின்கலினகலிலென்னச்சுரரும முனிவரும் ஜெய ஜெய
ஜெயனச்சைவவைதிகசிவ சமயம்மெய்கண்டதெய்வந் - தாந்தாந்
தாந்தாந் தாந்தாந் தாந்தாந் தாந்தாந்தாமென் றாடவெடுத்து

௩. பரிசதசேர்டிபோற்றேன்றுமொரு-பொற்பாதபதுமம் முயலக
ன் மேலூன்றிஇருவ கின்னிசையாழ்பாடப் புலியும்பாம்பு மேத்
திவணங்கிக்கொண்டாடச் - சுருதிகூடத்திருமலைக்கந்தனுந் தந்த
னுந்தாவெனச் சிந்திக்குமான் மாலயன்றுதாவென-வொரு-அடி
யன் பிலர்க்குந் தெரிகிதகளவில்-வீடுண்-டுண்டுண் டுண்டுண் டுண்
டுண் டுண்டுண் டுண்டுணடென் றாடவெடுத்த

நீர்தால் துதி-கீர்த்தனம்-இ-ம்-பரஸ்-ஏகதாளம்

பல்லவி.

திருக்கூத்திற்குத் துணிந்தம்பலத்தில் வந்துபின்னர்
திரைமறைவென்சொல்லும் ஐயா

அநுபல்லவி.

மருக்கூலிரும்பினை சடைமீதிலொருநதியை
வைத்துக்கொண்டசேதி மறைத்தால்மறைக்கலாமோ திரு

சரணங்கள்.

௧. ஆதிக்குமனையாட்டி பாதியுடம் பானத்தை யறிவார்களுலகுள்ளோர் யாரு-வாதாக்காடினகா லைசந்த போனத்தைநீர் மறைப்பதெப்படி யெண்ணிப்பாரும்-போதாக்குறைக்கு மூத்தமகனார்ச்சப்பாணிக்காற் புதுமையிதின்மேலுண்டோவயிறும் பெருவயிறு ஏதுக்கென்று சொல்வார்-சமாதானந் தேவரீருக்கிடம் வெளியின்றிருக்குஞ் சொல்லுதேநீர் திருக்

௨. இஷ்டமாயன்னம்பாலிருக்கத் தலையோட்டினி லிரந்தபித்தனென் சொல்லடங்குமோ சட்டஞ்சட்டமொரு கண்ணில்... தவனென்று தரணியோர் சொல்லும்வார்த்தை வடங்குமோ பிட்டுக்கொருத்தி கூலியாளாய்ச்சுமந்திரைப் பிரம்பினுலடிபட்ட பேச்சொழிக்குமோ வொரு-சட்டியிற்கொக்கரித்த வேடனையின்றும தலைக்கறி தனையுண்டுஞ் சைவமுதல்வனென்றுந் திருக்

௩. ஹர்ஹராகோவணமுமோடுந் திருடனீசிரன் பார்வாயைநாமூடலாமோ-உரைபெற்றதிருக்கோவை யுரைத்தசெந்தமிழ்க்கோவையுட்கொண்டதுமலை விட்டுப்போமோ-ஒருவரறிந்தாலல்லவோ ரகசியமூவாயிரவரறிந் திருந்துமரகசியமோ தெரிசித்தவர்க்கு மூத்தியளிக்குஞ்சிலரே திருமலைக்குத்தாசன் றமிழ்க்கனுகூலரே.



## சிதம்பரம் அமிர்தகவி குப்பையப்பிள்ளைபாடியது.

கீர்த்தனம்- இம் நாதநாமக்கிரியை ஆதிதாளம்

பல்லவி.

தெரிசிக்கவேண்டும் கனகசபை தெரிசிக்கவேண்டும்

அநுபல்லவி.

தெரிசித்தபொழுதங்கே வரமுத்திபெறலாமே
பரமத்துடனையநவரதத் தாண்டவரூபமே